[26th April 1960

SRI T. T. DANIEL: Sir, some of the teachers have opted for the Kerala Government service, and due to such option several vacancies of I-Grade teachers have arisen in that district. Will these posts at least be filled up by the teachers of the former Travancore-Cochin State on the basis of the ratio of 2 : 7 ?

THE HON. SRI C. SUBRAMANIAM: I have already stated that the matter is under the consideration of the Government. Early orders will be issued.

*Death Anniversary of Thiruvalluvar*

* 827 *Q.*—SRI S. M. ANNAMALAI (on behalf of SRI M. P. SARATHI): கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) பிப்ரவரி மாதம் 16-ம் தேதியை திருவள்ளுவர் இறந்த ஆண்டு விழா (Death Anniversary) என்று கொண்டாடும்படியாக இந்த அரசாங்கம் சிபாரிசு செய்ததா ?

(ஆ) அப்படியாயின் அவ்வாறு செய்யக் காரணம் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM: (அ) No, Sir.

(ஆ) Does not arise.

SRI S. M. ANNAMALAI: தமிழ் நாட்டிலே பெரியவர்களுக் கெல்லாம் பிறந்த தின விழா கொண்டாடுவது வழக்கம். மத்திய சர்க்கார் திருவள்ளுவர் இறந்த ஆண்டு விழா என்று வைத்திருக்கிறார்களே, இதை மாற்றி அமைப்பதற்கு நமது சர்க்கார் மத்திய சர்க்காருக்கு ஆலோசனை கூறுவார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM: திருவள்ளுவர் எப்போது பிறந்தார், எப்போது இறந்தார் என்று யாருக்கும் தெரியாது. இப் பொழுது டெத் அன்னிவர்சரி என்று திருவள்ளுவர் இறந்த ஆண்டுவிழா என்று ஒரு நாளைக் குறிப்பிட்டிருக்கிறார்கள். சாதாரணமாக இந்த நாளை எப்பொழுது வேண்டுமென்றாலும் கொண்டாடலாம், வழக்கமாக இருக் கிறது. அக்டோபர் இரண்டாம் தேதி வரக்கூடிய காந்தி ஜயந்தியை இரண்டு மாதத்திற்குப் பிறகும் கொண்டாடுகிறோம்.

SRI K. ANBAZHAGAN: பொதுவாக ஒத்துக்கொள்ளப்பட்டிருக்கிற வள்ளுவர் பிறந்த மாதம் மாசி மகம் என்றும், இறந்தது வைகாசி அனுடம் என்றும் கூறப்படுகிறது. அவருடைய பிறந்த நாளும் இறந்த நாளும் தெரிகிற காரணத்தால், இறந்த நாளைக் கொண்டாடுவதற்குப் பதிலாக திருவள்ளுவர் பிறந்த நாளை கொண்டாடுவதற்கு ஏன் வற் புறுத்தக்கூடாது ?

THE HON. SRI C. SUBRAMANIAM: தமிழர் நெறியில் பற்றுக் கொண்டவர்கள் பிறந்த தினத்தைக் கொண்டாடுகிறோம். அவர்கள் இறந்த தினத்தைக் கொண்டாடுவதை சிறப்பாக நினைக்கிறார்கள்.

SRI K. VINAYAKAM: நமக்கு பிறந்த ஆண்டு இருக்கும்போது, ஏன் இதை திருவள்ளுவர் பிறந்த தினமாக வைத்துக்கொண்டாடக் கூடாது என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: யார் யார் எதை வேண்டு மென்றாலும் வைத்துக்கொள்ளலாம். இதில் ஒன்றும் தவறு இல்லை.

SRI V. K. KRISHNAMURTHY: அனுபூதி நிலை எய்திய நாளைக் கொண்டாடுவது தமிழர் மரபு—தவறு இல்லை. இறந்த நாள் சிறந்தநாள்.

THE HON. SRI C. SUBRAMANIAM: தமிழ் புலவர்கள் மத்தியிலே போய் தீர்த்துக்கொள்ளவேண்டிய விஷயம். இருவருக்கும் தனி யாக ஒரு கூட்டம் வேண்டுமானால் ஏற்படுத்தி அங்கே விவாதம் செய்து எது சிறந்தது என்று முடிவிற்கு வந்து அதை வேண்டுமானால் அரசாங் கத்திற்குத் தெரிவிக்கட்டும்.